


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

## தொழில் நுட்பக் கல்வி

*



சென்ற பத்து ஆண்டுகளாக, இந்தியாவில் துரிதமாகத் தொழில்கள் வளர்ச்சியடைந்து வருவதால், எஞ்சினியர்களும், தொழில்நுட்ப சிப்பந்திகளும் ஏராளமாகத் தேவைப்படுகின்றனர். இரண்டாவது திட்ட காலத்தில் மட்டுமே, தொழிற்சாலைகளுக்கும், போதனை, ஆராய்ச்சி காரியங்களுக்குமாக சுமார் 29,000 எஞ்சினியரிங் பட்டதாரிகள் அதிகப்படியாகத் தேவைப்பட்டனர். இத்தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக, இரண்டு திட்ட காலத்திலும், புதிதாக 51 பட்டதாரிக் கல்லூரிகளும், 110 பாலிடெக்னிக் கல்லூரிகளும் ஏற்படுத்தப்பட்டன. கல்லூரிகளில் அனுமதிக்கப்பட்ட மாணவர்களின் எண்ணிக்கை, 1950-51-ல் 10,000 ஆக இருந்தது. 1960-61-ல் 39,400 ஆகப் பெருகியிருக்கிறது. இரண்டாவது திட்ட காலத்தில், எஞ்சினியரிங் கல்லூரிகளின் எண்ணிக்கை 65-லிருந்து 100 ஆகவும் ஆண்டொன்றுக்கு அனுமதிக்கப்பட்ட மாணவர்களின் எண்ணிக்கை 5,890-லிருந்து 13,860 ஆகவும் உயர்ந்திருக்கிறது.

மூன்ருவது திட்ட காலத்தில் தொழில் பயிற்சி நிலையங்களை, நிறுவுவதற்காகவும், அப்பியாசிகள் பயிற்சித் திட்டத்தை அமுல் செய்வதற்காகவும், மாலை வகுப்புகளை நடத்துவதற்காகவும் ரூ. 49 கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறது.

சாந்தினிகேதன் குடிசைத் தொழில் இலாகாவில் தோல் தொழில் பயிற்சிப் பிரிவில் மாணவர்கள் பயிற்சி பெறுவதைப் படத்தில் காணலாம். *

## ஜனநாயக மரபுகள்

அரசியல் கட்சிகள் நாட்டின் சமூக, கல்வி, கலாசார, பொருளாதாரத் துறைகளை அபிவிருத்தி செய்வதற்கான ஆக்க வேலைத் திட்டங்களை எடுத்துரைப்பதோடு நிற்க வேண்டும் என்று சட்டமன்ற சபாநாயகர்கள் வருடாந்திர மகாநாட்டிற்கு தலைமைவகித்துப் பேசுகையில் திரு. அனந்தசயனம் குறிப்பிட்டார்.

கடந்த இரண்டு பொதுத் தேர்தல்களும் அமைதியான முறையிலும், ஒழுங்கு குலையாமலும் நடந்தன என்பதை சுட்டிக் காட்டிய அவர், கடந்த 15 ஆண்டுகளாக ஜனநாயக ரீதியில் செயல்படுவதில் நாம் அநேகமாக வெற்றி கண்ட போதிலும், ஆரம்ப வெற்றியின் காரணமாக அலட்சியமாக இருந்துவிடக்கூடாதென்றும், மக்களிடம் ஜனநாயக மரபுகள் இன்னும் நன்ருக ஊன்றிவரவேண்டியுள்ளதென்றும், இது காலக்கிரமத்தில் தளர்க்கப்பட வேண்டியதேயன்றி ஒரே நாளில் நிறைவேறக் கூடியதல்ல என்றும் சுட்டிக் காட்டினுர்.

இன்னும் மாகாணப் பித்து, வகுப்புவாதம், ஜாதி வெறி போன்ற பிரிவினை சக்திகள் நம்மத்தியில் இருந்து வருவதன் காரணமாகவே தாம் இவ்வாறு கூறுவதாகவும் சபாநாயகர் குறிப்பிட்டார்.

இந்த பிரிவினை சக்திகளை ஈவு இரக்கமின்றி ஒழித்துக் கட்ட வேண்டும். ஒவ்வொரு பிரஜையின் உள்ளத்திலும் ஜாதி, மத, பிராந்தியம் என்ற குறுகிய எல்லைக் கோடுகளுக்கு அப்பாற்பட்ட ஒரு தேசிய மனப்பான்மை வளர்ந்தோங்க வேண்டும். உணர்ச்சி ரீதியிலும் ஒருமைப்பாடு நிலவுவதே தற்போதைய முக்கிய தேவையாகும் என்று அவர் கூறினுர். *

31-12-1961

# சூரியன் நமக்கு வழங்கும் வற்றாத செல்வம்

*

பூமியில் காணப்படும் எல்லா உயிர்களுக்கும் ஆதிகாலம் முதற்கொண்டு ஆதாரமாய் சூரிய சக்தி இருந்து வருகிறது. பூமியிலிருந்து சூரியன் திடீரென்று மறைக்கப்பட்டால், சில தினங்களுக்குள்ளேயே எல்லா உயிர்களும் மறைந்துவிடும்.

ஒவ்வொரு தினமும் சூரியனிலிருந்து நாம் பெறும் சக்தியின் அளவு, உலகிலுள்ள மக்கள் 24 மணி நேரம் உபயோகிக்கும் மின்விசையை விட 32,000 மடங்கு அதிகமாகும்.

சூரிய சக்தியை உபயோகிக்க முயற்சிக்கும் விஞ்ஞானிகளுக்கு, பாஸில் (பழம் பொருள் படிவ) எரிபொருள்களான எண்ணெய், வாயு, நிலக்கரி ஆகியவை குறிப்பிட்ட காலத்தில் தீர்ந்துவிடும் என்பது நன்கு தெரியும். மனிதனுடைய நீண்டகால விசைத் தேவைக்கு அணுசக்தி கூடப் பயனில்லை என்பது, (ஏனெனில் அணுசக்தி மூலப் பொருளான யுரேனியம் தீர்ந்துவிடக் கூடியது) அவர்களுக்கு நன்கு தெரியும்.

இயற்கையின் மூலம் கிடைக்கும் இவ்வகையான விசையின் மூலாதாரங்களை லட்சக்கணக்கான வருடங்களுக்கு மனிதன் உபயோகிக்க முடியும். ஆனால் அவற்றைத் திரும்ப ஈடு செய்யமுடியாது. இறுதியில் உலகமானது மற்ற விசை மூலாதாரங்களைத்தான் நம்பியிருக்கவேண்டும். இவ்வுலகில் உயிருள்ள வரை சூரிய சக்தி மனிதனுக்குப் பயன்படும் என்பதனால், 30 நாடுகளைச் சேர்ந்த விஞ்ஞான ஆராய்ச்சியாளர் சூரிய கிரணங்களைச் சிக்கன முறையில் கருவியில் தேக்கிவைத்து. பின் வேலைகளுக்குப் பயன்படுத்த முயன்று வருகிறார்கள்.

## சூரிய அடுப்பு

வளைந்த பிரதிபலிக்கும் சாதனத்தின் மூலம் சூரிய கிரணங்களை குவியச்செய்து அதனால் ஏற்படும் உஷ்ணத்தினால் குடும்பத்திற்கு வேண்டிய உணவைத் தயாரிக்கலாம் என்று இந்தியாவில் சூரிய அடுப்பை உபயோகித்துக் காட்டி உள்ளனர். இந்தியக் கிராமங்களுக்கு மலிவான விலையில் சூரிய அடுப்புகள் கிடைக்கும்படிச் செய்தால், கிராமவாசிகள் வழக்கமாக உபயோகிக்கும் பசுவின் உலர்ந்த சாணம் மிச்சமாகி உரமாகப் பயன்படும்.

அமெரிக்காவில் சூரிய சக்தியை உபயோகிக்க வழிகளையும், கருவிகளையும் கண்டு பிடித்துள்ளனர். அங்கு இருவகையான சூரிய அடுப்புகள் தயாரிக்கப்பட்டுள்ளன ஒன்றில் எளிதான பிரதிபலிக்கும் சாதனம் உள்ளது; இதனால் சூரிய கிரணங்களை, சமையல் செய்யும் பாத்திரத்தில் குவியச் செய்ய முடிகிறது. மற்றொன்று சூரிய அடுப்பு. கண்ணாடி ஜன்னலுடன் காப்பிடப்பட்ட (இன்ஸுலேட்.) உலோகப் பெட்டி ஒன்று உண்டு. இதைச் சுற்றிலும் சூரிய கிரணங்களைப் பிரதிபலிக்கும் சாதனம் உள்ளது. 200 டிகிரி செண்டி கிரேட் வரை உஷ்ணம் உண்டாகிறது. சாதாரண அடுப்பில் போன்று இதில் ரொட்டி சுட முடியும்.

அமெரிக்காவில் சூரிய சக்தி பற்றி இது வரையில் தனி நபர்களும், தனிப்பட்ட ஸ்தாபனங்களும் நடத்தியுள்ள ஆராய்ச்சி, சூரிய உஷ்ணத்தைக் குறைந்த செலவில் மின்சார உற்பத்தி செய்வதற்கான திசையில் திருப்பியுள்ளது. அடுத்தபடியாக, சூரிய உஷ்ணத்தைத் தேக்கிச் சேமித்து வைத்து அவசியப்படும் பொழுது உபயோகிக்க வழிகள் கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றன, மூன்றாவதாக, ஒளிச் சேர்க்கை அல்லது தாவரங்களின் மீது சூரிய வெளிச்சம் படும் பொழுது ஏற்படும் ரசாயன, மாறுதல் பற்றி ஆராய்ந்து இயற்கையின் ரகசியத்தை அறியவும் முயற்சி செய்யப்படுகிறது.

## சூரிய வெப்ப ஜனனி

சூரிய வெளிச்சம் படுவதனால் தாவரங்களில் கார்பன் டை-ஆக்ஸைடும் தண்ணீரும் ஒன்று சேருகிறது; இதற்கு பச்சையம் (குளோரோபில்) கிரியா ஊக்கியாகப் பயன்பட்டு பல வகைகளில் கார்போ ஹைடிரேட்டாக மாறுகிறது. இவையே 'எரிபொருளாகப் பயன்படுகின்றன; குடலிலுள்ள உணவுக்கும் சக்தி உற்பத்திக்காக மாற்றும் கருவிகளில் எரிபொருளாகவும் பயன்படுகின்றது.

சூரிய வெப்பத்தைச் சேமித்து வைக்கும் கருவி சாதனங்களை அமைப்பதற்குப் பெருத்த செலவாகிறது; விசையை உபயோகிக்கும் நகரங்களுக்கும், தொழிற்சாலைகளுக்கும் அது உடனடியாகக் கிடைக்காவிட்டாலும், சிறிய அளவில் அதை உபயோகிக்க வகை செய்ய முடியும் என்று விஞ்ஞானிகள் கூறி வருகிறார்கள்.

முதன் முதலாக விவசாயப் பண்ணைக்கும், வீட்டிற்கும் உபயோகிக்கலாம். விசைப் பற்றாக் குறையுள்ள பகுதிகளுக்கு இதைப் பின்னர் விஸ்தரிக்கலாம். இந்த விசை உற்பத்தி ஜனனிகள் மலிவாகவும், குறைந்த விசையுற்பத்தி உள்ளவையாகவும் இருக்கும். சூரிய வெளிச்சம் அதிகமுள்ள, தண்ணீர்க் கஷ்டமுள்ள இடங்களிலும் இது பெரிதும் பயன்படும்.

(11-ம் பக்கம் பார்க்க)

# புழுவும் மனிதனும்

—கே. ஆர். பசுபதி

[அம்பு போன்ற பாதை. அதன் இருமருங்கிலும் அடர்ந்த மரங்கள். அவற்றின் நிழல் பாதையில் படிந்து கிடந்தது. ஒரு சிலர் அப்பாதையிலே சென்றுகொண்டிருக்கின்றனர். வேகமாக ...துகொண்டிருந்த வண்டி திடீரென்று நின்றது. வண்டியை ஓட்டிவந்த மனிதன் கீழே இறங்கிச் சக்கரத்தைப் பார்க்கிறான். ஒரு புழு. அதைப்பார்த்துக் கேலியாகச் சிரித்துப் பேசுகின்றான்.]

மனிதன்—சின்னப்புழுவே! ஏன் பரபரப்புடன் காணப்படுகிறாய்? ஏன் ஓடுகிறாய்? நில். என் கேள்விக்கு விடை கூறிச் செல்.

புழு—மனிதனே! என் உயிருக்கே துன்பம் வரும்போது ஓடாமல் என்ன செய்வது?

மனி-(வியப்புடன்) உனக்கு ஆபத்து ஏற்படுமென்ற அறிவு எதைக் கொண்டு வந்தது?

புழு—மாட்டை ஓட்டும்போது நீ யெழுப்பிய குரல், வண்டி உருளைகளின் ஓலம், சவுக்கின் சொடுக்கு, இதன் மூலம் வண்டி வருவதைத் தெரிந்து கொண்டேன். ...கரமோ, மாட்டின் குளம்போ என்னுடைய உடலை நசுக்கிவிடக் கூடாதே என்பதற்காக தப்பிச் செல்ல முழு சக்தியுடனும் ஓடுகிறேன்.

மனி-(கேலியாக) பச்சைப் புழுவே! கேவலமான புழுப் பிறப்பில் உழல்கிறாய். நீ செத்தால் தான் என்ன? இந்த அற்ப உடலை ஏன் விரும்புகிறாய்?

புழு- (உணர்ச்சியுடன்) மனிதா! இந்த உடலையா விடச் சொல்கிறாய்? என் மேனியின் பச்சை நிறம், என் மேனியின் மிருதுத் தன்மை இவைகளைக்கண்டு என்னைக் காதலிக்கும் புழுப் பெண்களின் காதில் நீ சொன்னது விழுந்தால் உன் மண்டைக்குள் புகுந்துவிடுவார்கள். எச்சரிக்கை! இருப்பினும் சொல்கிறேன். நான் இவ்வுடலை நேசிக்கிறேன். இவ்வுடலில் எல்லையற்ற இன்பம் காண்கிறேன். இப்பிறவியைக் கண்டு நீ சிரிக்கிறாய்! எனக்கென்னவோ இது இனியது. நான் சாக விரும்பவில்லை. வாழவே விரும்புகின்றேன். உலகில் எவருமே அப்படித்தான் எண்ணுகிறார்கள்!

மனி-நீ என்ன மனிதனைப் போல் வாழ முடியுமா? அவர்களைப் போல சுக போகம் அனுபவிக்க முடியுமா?

புழு-மனிதரைவிட நான் தாழ்ந்தவனல்ல. எனக்கும் புலன்களுண்டு. இன்ப நுகர்வுண்டு. உணர்ச்சியுண்டு. அறிவும் உண்டு. எங்களுக்கும், பறவைக்கும், மிருகத்துக்கும், கொடிக்கும், அறிவில் ஏற்றத் தாழ்வைக் காட்டி மனிதனில் ஒருவன் இலக்கணமே வகுத்துவிட்டான். பாபம். அவன் சிந்திக்கத் தவறிவிட்டான். அல்லது தன்னை, தன் மனித பரம்பரையை உயர்த்திக் கொள்ள எழுதிவிட்டான் என்று அனுதாபப்படுகிறேன். நாங்களும் வாழ்கிறோம். எங்கள் உடல், உணவு, சூழ்வுகளுக்கேற்ப! அப்படித்தான் ஒவ்வொரு உயிரும்! என்னைவிட கொடியை மட்டமாக எழுதி வைத்தான் மனிதன்!

மனி-சந்தேகமென்ன! புழுவை விட, கொடி மட்டந்தான். அதற்கேது புலன்கள்!

புழு- (உறுதியான குரலில்) கொடி மட்டமல்ல! நான் எதையுமே ஆராய்ந்து பார்ப்பது வழக்கம். கொடியைப் பார். ஆகாயம் இருக்கின்றது. அதன் வழியே பூவும், காயும் வெளி வருகின்றது! வெப்பம் வீசும் போது வாடுகின்றது, வெம்புகின்றது. உலர்கின்றது. பரிச உணர்வு இருப்பதால் தானே இது நிகழ்கின்றது! காற்று, இடி, நெருப்பு இவற்றின் அதிர்ச்சி தாங்காமல் இலையையும், பிஞ்சையும் உதிர்க்கின்றது. செவியிருப்பதால் தானே ஓசையை உணர்கின்றது! பக்கத்தில் உள்ள கம்பை நாடிச் செல்கின்றது. கண்ணும், காலும், இருப்பதால் தானே இது நடக்கின்றது! தூபமும், தீபமும் போடுவதால் செடி கொடிகளின் நோய் தீருகின்றது. நல்ல பூக்கள் பூக்கின்றன. காய்க்கின்றன. மூக்கில்லாவிட்டால் மணத்தை முகர முடியுமா? சுத்தமற்றவர்களோ, அல்லது அசுத்தப் பொருளோ நெருங்கினால், அவ்வாடையை முகர்வதால் மரம், செடி, கொடி நோய் வாய்ப்படுகின்றது. எனவேதான் சுகந்தப் பொருள்களும், தூப, தீபங்களும் நல்லுரங்களும் வைத்துப் படைப்பதின் மூலம் முகர்ந்துநோய் தீர்கின்றது! நாவில்லையேல் முடியுமா? வெட்டப்பட்டது, தளிர்க்கின்றது. உயிரில்லையேல் தளிர்க்குமா? எனவே, கொடியை மட்டமென எண்ணாதே! அவரவர்களின் உடலுக்குத் தக்கவாறு இன்பம் அமைகின்றது. உடலின் அளவு வித்தியாசப்படுகின்றதே தவிர, இன்ப உணர்வு வித்தியாசப் படுவதில்லை! இன்பத்தைத் தனியாக எடுத்து, இது மனிதனுடையது, இது மரத்தினுடையது, இது புழுவினுடையது என்று உங்களால் அளவிட்டுக் காட்ட முடியுமா?

மனி-மனிதன் சொல்வன்மை படைத்தவன். அவனுக்கு குரல் உண்டு. அவன் உயர்வுடையவன்...

புழு- வல்லமை, காக்கை, நாய், முதலிய உயிர்களுக்கும் உண்டு. மனிதனில் ஊமையில்லையா? செவிடில்லையா? கூனில்லையா? ஊனமுடையவனில்லையா? கிளி கூடச் சொல்லிக் கொடுத்தால் பேசுகின்றது. மொழி நாப் பழக்கம்!

மனி-நீ என்ன சொன்னாலும் சரி. கேவலமான புழு உடலை நான் விரும்ப மாட்டேன்.

புழு-உன் விருப்பத்துக்காக நான் உடலைத் துறக்க முடியுமா? மனிதக் கூட்டத்தில் பார்க்கப் பயங்கரமான தொழு நோய் பிடித்தவர்கள் உலவுகின்றார்கள். அவர்கள் கூட அழுகும் உடலோடு பவனி வருகின்றார்கள். வாழ ஆசைப்படுகின்றார்கள். அவர்களையும் நீங்கள் சகித்துக்கொண்டு தானே இருக்கிறீர்கள்!

குருடன் விழியுள்ளவனை வெறுக்கிறான். குள்ளன் உயரமானவனைப் பார்த்துப் பொறுமைப்படுகிறான். கூனனைப்பார்த்து நிமிர்ந்தவன் நகைக்கின்றான். உம்மில் இல்லாதது எது எம்மில் காண்கிறாய் மனிதனே! சிந்தித்துப் பதில் சொல்! பிறப்புக்கு வரம்பு கட்டத் துணியும் மனிதனே குருடனும், குள்ளனும், கூனனும், தொழு நோய் உள்ளவனும், நெட்டையனும், ஏன் மனிதரே இவ்வளவு தான் இருக்க வேண்டுமென்று ஒரு உச்ச வரம்பு கட்டு பார்க்கலாம்? மனிதரில் சில பித்தம் பிடித்தவர்கள் இயற்கையை எதிர்க்கின்றனர். சில சுயநலம் பிடித்தவர்கள் அதற்குத் தாளம் போடுகின்றனர்!

மனி - பேசும் திறமை படைத்த புழுவே! கேள் எங்களுக்கு வீடுண்டு, குடும்பம் உண்டு.........



புழு—(இடை மறித்து) நிறுத்து. எங்களுக்கும் வீடுண்டு. குடும்பமுண்டு. இன உணர்ச்சியுண்டு. ஆனால் ஒரு புழு, மற்றொரு புழுவைச் சாப்பிடுவதில்லை! சுரண்டுவதில்லை! அடிமைப் படுத்துவதில்லை! சுதந்திரமுண்டு!

மனி—(சீற்றமுடன்) அற்பப் புழுவே! (பற்களைக் கடிக்கிறான்)

புழு—(கோபமுடன்) ஆத்திரம் எனக்குக்கூட வருகிறது. ஆனால் விவேகமுண்டு! உனக்கு மூளை இருப்பது கொதிப்படைய அல்ல, ஆனால் ஒளி வீச! என்னைப் பல தடவைகள் கேவலமாகப் பேசிவிட்டாய்! நான் சொல்கிறேன். மனிதன் புழுவைவிடக் கேவலமானவன்!

மனி—(படபடப்பாக) எவன் சொன்னவன்?

புழு—புதுமைப் பித்தன்! ஆமாம். நெல்லையில் பிறந்து, தொல்லையில் இறந்தவன்! இலக்கிய வேந்தன்! அவன் சொல்கிறான். மனிதன் அமீபா புழுவைவிடக் கேவலமானவனென்று!

மனி—(கண்களை வியப்பால் அகல விழித்து) ஆமாம். உனக்கெப்படித் தெரியும்?

புழு—(கிண்டலாக) நான் ஒரு புத்தகப் புழு! மனிதனே! நீ எப்படி?...!

மனி—(அடங்கிய குரலில்) அது போகட்டும். நீ மனிதனாக வேண்டுமென்று ஆசைப்படவில்லையா?

புழு—ஏன் இல்லை. மனந்தானே காரணம். உன் உடலுக்குத் தக்கவாறு நீ சில சௌகரியங்களைப் பெருக்கிக் கொள்கிறாய். தோற்றங்களோ சூழ்நிலைகளுக்குத் தக்கவாறு கவர்ச்சிகரமாக இருக்கின்றன. நீ நடக்கிறாய். நான் ஊர்கிறேன். உனக்கு வேகம் அதிகம். எனக்குக் குறைவு. உன் தோற்றத்தை நான் விரும்புகிறேன். ஆசைப்படுகிறேன். ஆசைதானே வாழ்க்கை. யாரும் இருக்கும் இடத்திலேயே இருக்க விரும்புவதில்லை. எங்கும் சகல சுதந்திரமுடன் திரியவே விரும்புகின்றனர். எதிலும் கட்டுப்பட விரும்புவதில்லை. தகுதியுண்டோ யில்லையோ எப்படியாவது உயர் நிலையுடையவே, முன்னேறவே விரும்புகின்றனர். இந்த ஆசையே வாழ்க்கைச் சக்கரத்தின் அச்சாணி! உலக வாழ்வின் ரகசியம்.

மனி—வண்ணப் புழுவே! உனது கூரிய வாதத் திறமையைப் பாராட்டுகிறேன். மனிதனைப் புழு என்று எண்ணிவிடாதே! அவன் கம்பீரமானவன். அவ்வை சொன்னாள். கார்க்கி சொன்னான். தெரியுமா?

புழு—தெரியுமாவா! நன்றாக அலசியிருக்கிறேன். ஆனால் எப்போது! சகல உயிர்களையும் நேசிக்கும் போது! ஒருவனை ஒருவன் பிடுங்கித் தின்னாமலிருக்கும் போது! விரிந்த இதயம், கருணை பொழியும் கண்கள், இனிய நாக்கு இருக்கும் போது! தீமையைக் கண்டு அஞ்சாமலிருக்கும் போது! சுதந்திரத்தைக் காக்கப் போராடும் போது! அப்போது கம்பீரமானவன்! அப்போது மனிதப் பிறவி அரிய பிறவி! ஆனால், இவைகளை இழந்த மனிதன் புழுவைவிடக் கேவலமானவன்! மனிதனே! நானாவது பட்டுப் பூச்சியாகி விடுவேன். அடிமைச் சக்கரத்தில், அஞ்சி நடுங்கும் மனிதனே புழுவை விடக் கேவலமானவன். அவனுக்கு உய்வேது?

மனி—புழுவே! நீ மனிதனாக முயன்று வெல்க! வாழ்த்துகிறேன்!

புழு—மனிதனே! நன்றி! நீ மனிதனாக முதலில் வாழ்கிறாயா என்று சிந்தித்துப் பார்! மனிதனாக வாழக் கற்றுக் கொள்! பிறகு, அதைவிட எதாவது உயர்விருந்தால் அதையும் அடைய வாழ்த்துகிறேன்.

மனி—ஏதாவது உதவி செய்ய வேண்டுமா புழுவே!

புழு—என்னுடைய சொர்க்கத்தில் என்னை எடுத்து வை!

மனி—உன் சொர்க்கமா?

புழு—ஆம். என் வீடு என் குடும்பம்!

மனி—எங்கே!

புழு—அதோ. அந்தக்கிளையில், விரிந்த இலை! அதுவே என் பட்டு மெத்தை! விரைவாக எடுத்து வை! என் சின்னக் காதலி கலங்கிய கண்களோடு வழிமேல் விழி வைத்துக் காத்திருப்பாள். குயில் கூவுகின்றது! தென்றல் வீசுகின்றது! பசலை நிலா பூக்கின்றது!

மனி—(நகைத்து) காவியப் புழுவே! வருகிறேன். மனித சுதந்திரத்துக்காக பாடுபடுவேன்.

புழு — நல்லது மனிதா! நான் மனிதனாகப் போராடுவேன்! உள்ளத்தால் உயர்ந்தவனே மனிதன்!

மனி—உள்ளத்தால் தாழ்ந்தவன் புழுவை விடக் கீழானவன்!

புழு—உள்ளத்தால் உயர்ந்தால், தீமையைக் கண்டுக் காறியுமிழும் திராணி வந்து விட்டால்; வாழ்வு அப்போது இனிக்கும்!

மனி—அப்போது உலகமும் இனிக்கும்!

புழு—இனிமை! இனிமை! இனிமை!

மனி—விடுதலை! விடுதலை விடுதலை!

புழு—ஆம்! ஆம்!

மனி—ஓம்! ஓம்!






### திருமணம்

திருச்சி மாவட்டக் கலெக்டர் திரு. குலாம் முகம்மது பாட்சா அவர்களின் மகள் திருமதி சுகீன பேகத்திற்கும் மைசூர் ராஜ்யம் ஆண்டர்சன் பேட்டையைச் சேர்ந்த திரு. ஷேக் அப்துல்லா சாயபுவின் மகன் திரு. மகபூப் சரீபுக்கும் திருச்சி கலெக்டர் பங்களாவில் 24—12—61-ல் திருமணம் நடந்தது.

விவாக வைபவத்திற்கு அரசாங்க பெரிய அதிகாரிகளும், சிப்பந்திகளும், பிரமுகர்களும், சட்டசபை மெம்பர்களும் வந்திருந்தார்கள்.

முதலமைச்சர் திரு. காமராஜரிடமிருந்தும் அமைச்சர் திரு. பக்தவத்ஸலத்திடமிருந்தும் வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன.

திருமணத்தை யொட்டி திருக்கோவிலூர் சகோதரிகளின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது.

“வாழ்க மணமக்கள்” என்று உள்ள நிறைவுடன் வாழ்த்துகிறோம்.



### எழுத்தாளர் சங்கக் கூட்டம்

திருச்சி தமிழ் எழுத்தாளர் சங்கக் கூட்டத்தில் இலங்கையைச் சேர்ந்த தமிழ் சிறு கதை எழுத்தாளர் திரு. டொமினிக் ஜீவாவுக்கு சங்கத்தின் சார்பாக வரவேற்புக் கொடுக்கப்பட்டது. இலங்கையில் இலக்கிய வளர்ச்சிபற்றி திரு. டொமினிக் ஜீவா விளக்கினர்.

சிறுகதை எழுத்தாளர் திரு. ஏ. எஸ். ராகவன் தலைமையில் திரு. கோ. வன்மீகநாதம் பிள்ளை பக்திப் பாடல்கள் பற்றிப் பேசினர்.

சங்கத் தலைவர் திரு. அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் ஆரம்பத்தில் எல்லாரையும் வரவேற்றுப் பேசினர். செயலாளர் திரு. ரா. நீலமேகம் நன்றி நவில கூட்டம் இனிதே முடிவுற்றது.



### விவசாய கண்காணிப்பாளர் மாநாடு

மாவட்ட விவசாய இலாகா கண்காணிப்பாளர்களது முதலாவது மாநாடு திரு. அண்ணாமலை முத்துராஜா தலைமையில் நடைபெற்றது. திரு. எல். சபாபதி பிள்ளை தேசீயக் கொடியை ஏற்றிவைத்தார். திரு. வெங்கட கிருஷ்ணன் மாநாட்டைத்திறந்துவைத்தார். மாவட்ட விவசாய அதிகாரி திரு. முத்துசாமி, திரு. ராமையா, திரு. தங்கவேலு, திரு. முத்துசாமி திரு. ஆர். ராமநாதன் ஆகியோர் பேசினர்கள்.



### பிழை திருத்தம்

சென்றவார சிவாஜி இதழில் ‘அஷ்ட கிரகங்கள்’ என்ற தலைப்பில் வந்த செய்தியில் 3—2—1961 என்பதற்கு பதிலாக 3—2—1962 என்று திருத்தி வாசிக்கவும்.

# சிவாஜி

ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஒலி 27 | 31—12—1961 | வாரம் 8


## தொன்னையும் நெய்யும்

தொன்னைக்கு நெய் ஆதாரமா, நெய்க்குத் தொன்னை ஆதாரமா என்று ஆராய்ச்சி செய்யக் கூடாது. ஏனென்றால் தொன்னையைக் கவிழ்த்தால் நெய் சிந்திப் போகும். வெறும் தொன்னையைப் பிறகு வீசி எறிய வேண்டியதுதான்.

காங்கிரஸ் கட்சியின்பால் உள்ள அதிகாரம் மாற்றத்தக்கதுதானா என்ற ஆராய்ச்சியைச் செய்யுமாறு எதிர்க் கட்சிகள் இப்பொழுது மக்களுக்குப் பலவாறாகப் புத்தி சொல்லிக் கொடுக்க முன்வந்திருக்கிறார்கள்.

இப்பொழுது அதிகாரத் தொன்னையிலிருந்து காங்கிரஸ் நெய்யைக் கீழே கவிழ்த்து விட்டால் அந்தத் தொன்னையில் நிறைப்பதற்கு வேறு பொருள் ஒன்றும் கிடைக்காது. கலப்படப் பொருள்களை அதிகாரத் தொன்னையில் நிறைத்து வைத்துக்கொண்டு அழகு பார்க்க இந்த நேரம் நம்முடைய நாட்டுச் சூழ்நிலையில் மக்களுக்குக்கட்டிவராது.

அந்தக் கலப்படம் பயன்படாதென்று தெளிவாகப் பின்னர் தெரிந்தால் சிந்திய நெய்யைப் பிறகு சேர்த்து எடுக்க முடியாது. சீரழிந்து நிற்பதுதான் மக்களின் தலையெழுத்தாக முடிந்துவிடும்.

அப்படியானால் அதிகாரம் ஒரு கட்சிக்கே சர்வ போகமா என்று கேட்கலாம். அப்படிச் சொல்லவில்லை. தொடங்கி நிறைவேற்றிக் கொண்டிருக்கிற நூறாயிரம் திட்டங்கள் பாதிப் பாதியாக இருக்கிற நேரத்தில் அதைச் செய்து முடித்து ஒரு கட்டத்தை நாம் அடையும் வரையிலும் காங்கிரஸை நாம் இழந்துவிடக் கூடாது.

எடுத்த காரியம்—தீட்டிய திட்டம் சரிவர நிறைவேறட்டும். பிறகு நமக்குப் போதவில்லை யென்றாலும், வேறு சிறந்த ஆட்சி வேண்டுமென்றாலும் பின்னர் அதற்கு ஒரு சந்தர்ப்பம் கொடுக்க முயற்சிக்கலாம்.

காங்கிரஸ்தான் இன்னும் பல ஆண்டுகள் பொறுப்பில் இருக்கவேண்டும். புதிய சோதனைகளைச் செய்ய விரும்பும் தினவெடுத்த கட்சிகளின் முயற்சிக்குச் சிறிதும் ஆதரவு காட்டக் கூடாது. இதைத்தான் வாக்காளர் இப்போது கருத வேண்டும்.

★

# கண்ணோட்டம்

[ ரா. நா. ]

பத்திரிகை நிருபர்கள் என்றுமே நேர்மைக்குப் பெயர்போனவர்கள். விருப்பு வெறுப்பின்றிச் சம்பவங்களைச் சித்திரிப்பவர்கள். கண்ணியமாக யாரிடமும் நடந்து கொள்ளும் இயல்புடையவர்கள். இந்த நற்பண்புகளை முற்றும் துறந்து அநாகரிகமாக நடந்துகொண்டனர் சமீபத்தில் பிரிட்டிஷ் அமெரிக்க நிருபர்கள். கோவா நடவடிக்கை விஷயமாக உள்ள தப்பபிப்பிராயங்களுக்கு மறுப்புக் கூற ஐ.நா. வுக்குச் சென்றார் நமது பாதுகாப்பு மந்திரி திரு. கிருஷ்ணமேனன், அவரிடம் நிருபர்களில் சிலர் மரியாதைக்குறைவாக நடந்து கொண்டனர். லண்டனிலும், நியூயார்க்கிலும். இன அபிமானம் அவர்களுடைய நற்பண்புகளை அமுக்கிவிட்டது. தங்களது வெள்ளை இனத்தைச் சேர்ந்த போச்சுகல் தனது அக்கிரம ஆதிக்கத்தை இழக்க நேர்ந்து விட்டதே என்கிற கலக்கத்தினால் மதியிழந்து விட்டனர் இந்நிருபர்கள்.

அவர்களது அடாத நடத்தையினால் நமது பாதுகாப்பு மந்திரி கோபவேசத்துடன் ஒரு அமெரிக்க நிருபரைக் கண்டிக்கவேண்டி வந்துவிட்டது. ஒரு நாட்டின் தலைவர் இப்படி கோபத்திற்கிடமளிக்கலாமா என்று கேட்கலாம். ஆனால் அவரை அவமதித்தது நம் நாட்டையே அவமதித்தாகும். அதனால்தான் அவர் நம் நாட்டின் மதிப்பைக் காப்பதற்காக தனது கோபத்தைக்காட்ட வேண்டிவந்துவிட்டது.

ஒரு அமெரிக்க நிருபர் கடுமையான குரலால் கோவா நடவடிக்கையை நீங்கள் ஆக்ரமிப்பெனக் கருதிவரக் கூடுமா? என்று கேட்டார். திரு மேனன் உதட்டைக் கடித்துக் கொண்டார். அவர் பார்வையில் கோபக்கனல் வீசிற்று. எனினும் புன்முறுவலை வரவழைத்துக்கொண்டு அமைதியாக "யாருடைய ஆதிபத்ய உண்மையையும் நாங்கள் அவமதிக்கவில்லை, ஐ.நா. வில் போர்ச்சுகல் தாவா செய்ய எவ்வித முகாந்திரமுமில்லை" என பதிலளித்தார். உடனே அந்நிருபர் திரு மேனனின் முகத்திற்கு நேராக அதிரும் குரலால் "உங்கள் செயலைப்பின் என்னவென்றழைப்பது" என்று கேட்டார். உடனே நமது பாதுகாப்பு மந்திரி கோபமாக "இம்மாதிரி என்னுடன் நீங்கள் பேசினால் நீங்கள் உதைத்துத் தள்ளப்படுவீர்கள். இம்மாதிரி இனி நீர் என்னிடம் பேசலாகாது. இம்மாதிரி என்னை அவமதிக்க உங்களுக்கு உரிமையில்லை. நீங்கள் யார் என நினைத்துக் கொண்டிருகிறீர்கள்." உடனே அந்நிருபர் மன்னிப்புக் கேட்டார். திரு. மேனனும் உடனே தாம் கோபமாகப் பேசியதற்காக மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். தங்களது இனத்தைச் சேர்ந்த வெள்ளையரான பிரிட்டிஷாரையே விரட்டி விட்டு சுதந்திரத்தை நிலை நாட்டின அமெரிக்கர் கோவாவின் அக்ரம ஆதிக்கத்திற்கு அனுதாபம் காட்டி ஆத்திரமடைவது இவ்விருபதாவது நூற்றாண்டில் விந்தை என்றே கருத வேண்டும்.

★

அரசாங்க அதிமர்களுக்கு திறமையை விட நாணயம் தான் அத்யாவசியமாக வேண்டும். ஆனால் இந்த குணம் மருந்துக்குக் கூட இல்லை காங்கோவின் நடு

பகுதியான கடாங்காவின் தலைவர் ஷோம்பேய்க்கு. காங்கோவின் ஒற்றுமையைக் குலைப்பதற்காகவே செயல் புரிந்து வருகிறார். காங்கோவின் முதல் பிரதமர் லுமும்பாவைக் கொலை செய்ய உடந்தையாகயிருந்தார். ஐ. நா. வின் பிரதம செயலாளர் திரு ஹாமர்ஷோல்டின் மரணத்திற்கும் அவர் பொறுப்பாளி. அவர் செய்து கொள்ளும் எந்த ஒப்பந்தத்தையும் அவர் காப்பாற்றுவதில்லை. ஐ. நா. வையே எதித்துப் போர் புரிந்து வருகிறார். சமீபத்தில் மத்திய அரசாங்கத்தின் பிரதமரான அடோவ்வாவிடம் பேசி சில உடன்பாடுகள் செய்து கொண்டார். ஆனால் பேச்சு முடிந்த சில மணி நேரங்களில் தாம் ஒப்புக்கொண்டதை கடாங்கா சட்டசபை ஒப்புக்கொண்டால்தான் ஊர்ஜிதம் என்று கூறி மத்திய அரசாங்கத்துடன் பேச ஒரு தூது கோஷ்டியை அனுப்பியுள்ளனர். கறுப்பு நிறத்தலைவர்களுக்கு, அதுவும் நீக்ரோக்[illegible]க்கு சுதந்திரம் என்றால் [illegible]ன என்று தெரியாது [illegible]ன்று மேற்கத்தி நாட்டினர் பிரசாரம் செய்து வருகையில் அவர்கள் கூறுவது உண்மை என்பதை நிரூபிப்பது போல் ஷோம்பே நடந்துகொள்வது வருந்தத்தக்கது. ஐ. நா. உறுதியுடன் நடவடிக்கைகள் நடத்தி கடாங்காத் தலைவரைப் பணியவைத்தால்தான் காங்கோ தகராறுக்கு முடிவு காண முடியும்.

★

ஜனநாயக சோஷலிஸம் என்பது முதலாளித்வம் கம்யூனிஸம் இரண்டிலுமுள்ள குறைபாடுகளை நீக்கி ஜனங்களுக்கு நல் வாழ்வளிக்கும் ஒரு அரசியல் முறை. இந்த அடிப்படையில் ஐரோப்பாவிலுள்ள ஸ்விடன் நாட்டில் ஆட்சி நடைபெறுகிறது. அந்த ஆட்சியினால் ஏற்பட்ட நன்மைகளை ஒரு நிருபர் பின்வருமாறு விவரிக்கிறார்.

“தொட்டிலிலிருந்து இடுகாட்டு மட்டும் மக்களின் தேவைகளை கண்ணியமான முறையில் கவனித்து வருகிறது அரசாங்கம், மக்களுக்கு தர்மம் செய்யும் ரீதியில் இந்த நலன்களைப் பெற மக்களுக்கு உரிமை உண்டு என்கிற அடிப்படையில்.

“கர்ப்பஸ்திரிகளுக்கு இலவச வைத்திய உதவி அளிக்கப்படுகிறது. இரண்டு மூன்று குழந்தைகள் உள்ள வீட்டு வேலை செய்யும் பெண்மணிகளுக்கு ரஜா அளித்து, அந்தக் காலத்தில் சொற்ப செலவில் பிரயாணம் செய்யும் வசதி அளிக்கப்படுகிறது. 15 வயதிற்குட்பட்ட குழந்தைகள் விடுமுறை நாட்களில் சொற்ப செலவில் பிரயாணம் செய்ய வசதி. 14 வயதிற் குட்பட்ட சிறுவர்கள் விடுமுறை நாட்களில் இலவசமாக நாடெங்கும் பிரயாணம் செய்யலாம். புதிதாகத் திருமணம் கொண்டவர்கள் வீட்டு வசதி பெற கடன் அளிக்கப்படுகிறது. வேலையில்லாதவர்களுக்கு புது வேலை பெற பயிற்சியளிக்கப்படுகின்றன. வேலைமாறி புதிய தொழிலுக்குச் செல்பவர்களுக்கு அரசாங்கம் கடன் அளித்து உதவுகிறது.

“எழுதப்படிக்கத் தெரியாதவர்களே கிடையாது.”

“நாட்டின் பொருளாதாரத்துறையில் 13 சதத் தொழில்களையே அரசாங்கம் ஏற்று நடத்துகிறது.”

“இங்கிலாந்தைவிட இங்கு வரி குறைவு. வருமானத்தில் இங்கு 65 சதம்தான் வரியாக வசூலிக்கப்படுகிறது. இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் வருமானத்தில் 90 சதம் வரியாக வசூலிக்கப்படுகிறது.”

★

ஸ்விடன் ஒரு சிறிய நாடு இந்தியாமாதிரி நடுநிலைமை நாடு. சென்ற 150 ஆண்டுகளாக அது எந்த யுத்தத்திலும் ஈடுபடவில்லை. அதன் ஆட்சி முறை சிறப்பாக அமைந்து இயங்கிவருகிறது. பிற பெரிய நாடுகளுக்கு எடுத்துக்காட்டாக ஸ்விடன் விளங்குகிறது.

★

பண்டித மதன்மோகன் மாளவியாவின் 100-வது பிறந்ததின விழா நாடெங்கும் கொண்டாடப்பட்டது. பாரத நாட்டின் சுதந்திரத்திற்காகப் பாடுபட்ட குணசீலர்களில் தலை சிறந்தவர் மாளவியாஜி காங்கிரஸ் மகாசபைக்கு மும்முறைதலைமை தாங்கி யிருக்கிறார். காந்திய சகாப்தத்திலும் அவர் மகாத்மாவுடன் ஒத்துழைத்து மக்களின் அபிமானத்திற்குப் பாத்திரமாக இருந்து வந்தார். புனித காசி க்ஷேத்திரத்தில் ஒரு பல் கலைக்கழகத்தை அமைத்து அந்நகரத்திற்கு மேலும் புனிதத்தை அளித்தார். “பிச்சை எடுப்பவர்களின் மன்னன்” என்று பண்டிட்ஜியை மகாத்மா அழைத்ததுண்டு, எந்தப் பொதுக் காரியத்திற்குப் பணம் சேர்ப்பதென்று அவர் கிளம்பினாலும் அவரை யாரும் வெறுங்கையுடன் அனுப்பியதில்லை. அவர் மேற்கொண்ட திருப்பணிகளுக்கு அக்காலத்தில் சுதேச மன்னர்கள் வாரி வாரி வழங்கினர்.

எல்லாவற்றையும் விட பண்டிட்ஜியிடம் போற்றத் தக்ககுணம் அவர் தெய்வ பக்தியிலும், ஆசார அனுஷ்டானங்களிலும் புராதன வழக்கங்களைக் கைவிடாதவர் என்பதுதான். வட்ட மேஜை மகாநாட்டிற்குச் செல்லுகையில் அவருக்கு இயல்பான தலைப்பாகை அணிந்து, தினம் தவறாமல் நீராடி தன்னுடன் கொண்டு சென்ற கங்கை நீரையே உபயோகித்தார். நாட்டுப் பற்றுக்கும், சமயப்பற்றுக்கும், பாண்டியத்திற்கும் தியாகத்திற்கும், தேச சேவைக்கும் எடுத்துக்காட்டாயிருந்ததுடன் மகாத்மாஜி, பண்டித ஜவஹர்லால் இருவருடைய மதிப்பிற்கும் பாத்திரமாயிருந்த பண்டித மதனமோகனமாளவியாஜியின் வாழ்க்கையிலிருந்து தற்கால இந்தியர்கள் ஆதர்சம் பெறலாம்.

★

## கிராம காங்கிரஸ் கமிட்டி நிர்வாகிகள்

லால்குடி தாலுக்காவைச் சேர்ந்த பாச்சூர் கிராமத்தில் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் நடைபெற்றது. 1962-ம் வருடத்திற்கு திரு. பொன்னையா நாடார் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். திரு. எம். காளிமுத்து துணைத் தலைவராகவும் திரு. ஆர். பெரியசாமி செயலாளராகவும், திரு. என். கண்ணபிரான் துணைச் செயலாளராகவும், பொருளாளராக திரு எம். முத்துவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

---

## திருச்சி டி. மு. கோ
## IA 1771/1961 in OP 28/1961

இறந்துபோன V. ஸ்ரீனிவாசய்யருக்கு வரவேண்டிய கடன்கள் விஷயமாக S. மஹாலெக்ஷிமி அம்மாள் — மனுதார்.

ஏற்கனவே மனுதாருக்கு கொடுக்கப்பட்ட பாத்ய சர்ட்டிபிகேட்டை பாண்டியன் பாங்கிலிருந்து வரவேண்டிய கடனுக்கும் extend செய்ய வேணுமாய் மனுதார் [illegible]டுத்திக்கும் மனு 8-1-62ல் முற்பகல் 11 மணிக்கு ஈரங்கி போடப்பட்டிருக்கிறது.

எம். எஸ். சுந்தரராஜன்,
மனுதார் அட்வகேட்.

5 - 4744 - 184




# அறிவும் ஆனந்தமும்

மனிதர்கள் ஒருவர்க்கொருவர் பழகுகின்ற பாங்கில்தான் எத்தனை வித்யாசங்கள்! புதியவர்களாக இருந்தபோதிலும் ஏதோ பிறவிகள் தோறும் கூடப் பிறந்து பழகியவர்களைப் போல நம்முடன் வந்து ஒட்டிக் கொண்டு விடுகிறார்கள். இன்னும் சிலர் எவ்வளவு நாள் பழகினாலும் ஒட்டுவதேயில்லை.

நட்புக்கு முகம் அறிந்து பழக வேண்டிய அவசியமே கிடையாதென்பதும் உணர்ச்சியின் ஒட்டுறவில் இரண்டு உயிர்கள் பரஸ்பரம் புரிந்து கொண்டு கேண்மை கொள்ள இயலுமென்பதையும் அனுபவத்தில் பார்த்து வருகிறோம்.



மனிதர்க்கு மனிதர் பழகுகின்ற தன்மையைப் போலவே ஒவ்வொருவனும் இந்த உலகுடன் கொள்கின்ற உறவும் அமைந்திருக்கிறது.

தன்னைத் தவிர்த்த இந்த உலகம் தன்னுடைய பாதையில் குறுக்கிட்டு வழி மறிப்பதைப் போல எண்ணி சதா எச்சரிக்கையுடன் ஒவ்வொரு தப்படியும் எடுத்து வைக்கிற மனிதர்கள் இருக்கிறார்கள். பிறந்து வளர்ந்த சொந்த வீட்டிற்குள்ளேயே பல ஆண்டுகள் வாழ்ந்த பிறகும் கூட ஒவ்வொரு கணமும் ஒவ்வொரு காரியத்தையும் இப்படிக் கூச்சத்துடன் செய்வார்கள்.

வேறு சிலர் இந்த அகில உலகமும் தங்கள் சொந்த வீடு போல எண்ணி யாருடனும் எந்த ஊரிலும் எந்த நாட்டிலும் தடையின்றிச் சுற்றிப் பழகுவார்கள்.

உண்மையில் இந்த உலகம் முழுவதும் ஒரு முழு பிண்டமான ஒரே பொருள். அதில் உள்ள நாம் ஒவ்வொருவரும் ஏனைய ஒவ்வொரு பொருளும், இந்த முழுமையின் அங்கங்கள் அல்லது அணுக்கள்.

இதைப் புரிந்துகொண்டிருப்பவன் தனது வாழ்க்கைப் பாதை தன்னை எங்கேயும் கொண்டு செல்லவில்லை யென்பதும் தனக்கு உரியதான இப்பெரிய உலக வீடு முழுவதிலும் தன் விருப்பம்போல் இவன் வளைய வருவதற்குத் தடை செய்யாத ஒரு பேரியக்கமாகவே இருப்பதையும் உணர்கிறான்.

இதைப் புரிந்து கொள்ளாதவன் இவ்வுலகத்தை பெரிய பரப்பாகவும் தனது ஆயுட் காலத்தை நெடிய பாதையாகவும், எதிரே தென்படும் ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு பொருளும் தன்னைத் தடுத்து நிறுத்தும் இடர்ப்பாடுகளாகவும் கருதுகிறான். எனவே அவன் எடுத்து வைக்கின்ற ஒவ்வொரு தப்படியும் அவன் இந்த உலகத் தடைகளை முயன்று பிரயாசைப் பட்டு வென்று பெற்ற பயனாகக் கருதிக் கொள்கிறான்.

உலகத்தில் தனது ஒருமைப்பாட்டை உணர்கின்றவனே உண்மையில் வாழ்வின் இன்ப ரகசியத்தை உணர்கின்றவன். அவனுடைய சொல்லுக்கும் செயலுக்குமே ஏனையவர்களுக்குப் பொருளும் ஒளியும் தெரிகிறது. ஏனென்றால் அவனே எல்லோருடைய இன்ப துன்பங்களிலும் கலந்து உறவாடுகின்ற இயக்கம் உடையவனாக விளங்குகின்றான். இத்தகைய அபூர்வ மனிதனே மகானாகவும் அவனுடைய எண்ணங்களே அறிவுக்களஞ்சியமாகவும் அவனுடைய தோற்றமே ஞானப் பொலிவுடையதாகவும் அவனுடைய செயல்களே ஆறுதல் தருவனவாகவும் ஏனைய மனிதர்க்குத் தோன்றித் துணையும் புரிகின்றன.

உலகினின்றும் தன்னை வேறாக எண்ணுகிறவன் உலகத்தை ஐயுறுகிறான், அஞ்சுகிறான், ஆராய்கிறான், எச்சரிக்கையுடன் வாழ்கிறான், எதையும் எதிர்க்கிறான், அழிக்கிறான், தனது வல்லமையைக் காட்டி வெருட்ட முயல்கிறான். இத்தகையவனையே உலகமும் ஐயுறுகிறது, அஞ்சுகிறது, ஆராய்கிறது, காவல் புரிகிறது, எதிர்க்கிறது, அழிக்கிறது, அவனுடைய வல்லமைகளைத் தவிடு பொடியாக்குகிறது.



ஐயம் தீர்ந்து விடல் வேண்டும். புலை அச்சம் போய் ஒழிதல் வேண்டும். அப்பொழுதுதான் மனிதன் தான் வாழும் உலகம் தன்னுடைய சொந்த வீடென்று கொள்ள இயலும். இவ்வுலக மாந்தர் அனைவரும் தனது உடன்பிறந்தார் என்ற ஒருமையுணர்ச்சி அத்தகைய உள்ளத்தில் பிறக்கும். தனித்து நிற்கும் பாங்கினின்றும் விரிவடைந்து அகிலமும் தானே நிறைந்து விடுகின்ற பேராண்மை இத்தகைய மனிதனுக்கே பொருந்தி நிற்கும்.



உலகம் தன்னால் வெல்லப் படத்தக்கதென்ற உணர்ச்சியே இன்றைய பௌதிக விஞ்ஞான முயற்சிகளுக்குக் காரணம்.

உலகம் தன்னுடையதே என்ற உணர்ச்சியே எந்த நாளும் ஒளியுடன் விளங்குகின்ற ஆன்ம ஞானம்.

ஆராய்ச்சி அறிவால் ஆற்றல் பிறக்கும். ஆற்றல் மற்றதை அடிமை கொள்ளும்.

ஒருமை உணர்வின் தெளிவால் ஆனந்தம் வரும். அந்த ஆனந்தத்தில் அகிலமும் தானே நிறைந்து நிற்கும் அற்புதம் தோன்றும்.

அறிவைக் காட்டிலும் ஆனந்தம் பயனுடையது. தனித்து நிற்கும் அறிவைக் காட்டிலும் தான் கலந்து நிறைந்து விளங்கும் ஆனந்தமே மானிடப் பெற்றி.

கல்வியும் கலையும் அறிவை வளர்ப்பதுடன் ஆனந்தம் தருவதாகவும் இருக்க வேண்டும். ஏனென்றால் ஆனந்தம் இதுவென்று அறியவும் அறிவு அவசியமாக இருக்கிறதல்லவா!



# காங்கிரஸ் ஆட்சி சாதித்தது என்ன?

## வினா

நம்முடைய நிலங்களை சர்க்கார் பறிமுதல் செய்து கொண்டு விடுவார்களாமே, இது உண்மையா?

## விடை

விவசாயிகளின் நிலங்களைப் பறிமுதல் செய்து அவர்களது சொத்துரிமையை ஒழிப்பது காங்கிரஸ் ஒப்புக்கொண்டுள்ள சோஷலிசத்தின் நோக்கமல்ல. உண்மை இதற்கு நேர்மாறானதாகும். கடந்த 40 வருடங்களாக விவசாயிகளுக்கு சொத்துரிமையை வாங்கித் தருவதற்காகத்தான் காங்கிரஸ் பாடுபட்டு வந்திருக்கிறது. ஆகவே எந்த விவசாயியும், காங்கிரசினுடைய சோஷலிசக் கொள்கையால் சொத்துரிமையை இழந்து விடுவோம் என்ற பயம் கொள்ளவேண்டாம்.

காங்கிரஸ் விரும்புவதெல்லாம் மற்ற துறைகளைப்போல விவசாயத்திலும் சுரண்டலுக்கு இடம் கொடுக்கக்கூடாது என்பதுதான். உழுபவனுக்கு நிலமளிப்பதாக காங்கிரஸ் மகாசபை உறுதி கொடுத்தது. அந்த உறுதிமொழியை இப்போது நிறைவேற்றி வருகிறது. ஜாமீன்முறை ஒழிப்பு, நில உச்சவரம்பு நிர்ணயம் இவற்றால் முன்னேற்றப் பாதையில் உள்ள தடைகள் அகற்றப்பட்டன. இனிமேல் கிராமங்களில் வசிக்காமல் நில உரிமை கொண்டாட முடியாது. குத்தகைக்கு உழுகின்ற விவசாயியின் வசம் நிலம் இப்போது வந்துவிட்டது.

"ஐயையோ! உச்சவரம்பு வந்துவிட்டதே என்று சிலர் சத்தம் போடுகிறார்கள். நிலம் இல்லாத விவசாயிகளுக்கும் குறைவான நிலம் படைத்தவர்களுக்கும் நிலத்தை வழங்குவதுதான் உச்சவரம்பின் நோக்கம். அரசாங்கம் அதற்கென்று எந்த நிலத்தையும் எடுத்துக் கொள்ள வில்லை.

சேவைக் கூட்டுறவுகளும், கூட்டுறவு விவசாயமும் நிலத்தைப் பறிமுதல் செய்வதற்கான முதல் நடவடிக்கைகள் என்று சிலர் பேசுகிறார்கள். அதுவும் தவறு. விவசாயிகள் தங்கள் நிலத்தை நன்கு அபிவிருத்தி செய்வதற்கு ஏற்ற வகையில் அவர்களுக்கு பணம் உதவி, தொழில் நுணுக்க அறிவு, விற்பனை வசதிகள் முதலியவற்றை அளிக்கவேண்டும் என்பதுதான் சேவைக் கூட்டுறவின் நோக்கமாகும். நீர்ப்பாசனம், வரப்புகள் கட்டுதல், பொறுக்கு விதைகளைத் தருதல், கடன் வசதி, விற்பனை ஏற்பாடு இப்படியெல்லாம் கோடிக் கணக்கில் காங்கிரஸ் அரசினர் ஆண்டு தோறும் செலவழித்து வருவது விவசாயிகளுக்கு உதவி செய்வதற்காகவே தவிர, அவர்களிடமிருந்து பிடுங்கிக் கொள்வதற்காக அல்ல. கூட்டுறவு விவசாயத்தில் கட்டாயம் என்ற பேச்சு மருந்துக்குக்கூட இல்லை. விவசாயிகள் அவர்கள் விரும்பினால் மட்டும் கூட்டுறவு விவசாயப் பண்ணையை ஆரம்பிக்கலாம். அவர்களுக்குப் பிடிக்கவில்லையென்றால் பண்ணையைக் கலைத்து விடலாம். அல்லது விருப்பமில்லாத விவசாயி அதிலிருந்து விலகிக் கொள்ளலாம். விவசாயி கூட்டுறவுப் பண்ணையில் சேரும் போதும் சேர்ந்து உறுப்பினராக இருக்கும் போதும் அதிலிருந்து விலகும் போதும் எந்த நிலையிலும்—அவருடைய நில உரிமை பாதிக்கப்படாது.

கூட்டுறவு விவசாயத்தின் அடிப்படையான கருத்து விவசாயம் சிக்கனமாகவும், உயர்ந்த முறையிலும் நடைபெற வேண்டுமென்பதுதான். நம் நாட்டில் உள்ள 4,43,00,000 விவசாயப் பண்ணைகளில் ஐந்து ஏக்கர் பரப்பிற்கு குறைவானவை 93,00,000 பண்ணைகள். இரண்டரை ஏக்கருக்குக் குறைவானவை 86,00,000 பண்ணைகள். ஒரு ஏக்கருக்கும்குறைவானவை, இதைவிட அதிகம் 87,00,000 பண்ணைகள். ஆம். இந்தியாவில் உள்ள பெரும்பான்மையான விவசாயப் பண்ணைகள் ஐந்து ஏக்கர்களுக்கும் குறைவான அளவையே உடையவை. குடும்பங்களில் அவ்வப்போது ஏற்படக்கூடிய பாகப் பிரிவினையால் இந்த அளவு இன்னும் குறைந்து போகிறது. இத்தகைய சிறிய நிலங்களுக்குப் பயிர்ச்செலவும் அதிகம். அவற்றை வைத்து குடும்பத்தை நடத்துவதும் சிரமம். கூட்டுறவு விவசாயம் இதற்கு மாற்று மருந்தாக இருந்து பலனளிக்கிறது. கூட்டுறவு விவசாயத்தின் பலனை நன்கு அறிந்து கொண்டு தாங்களாகவே கூட்டுறவு விவசாயச் சொசைட்டிகளை நிறுவ விவசாயிகள் முன்வரவேண்டும் என்றுதான் காங்கிரஸ் விரும்புகிறது. இதில் கட்டாயம் எதும் இல்லை. இன்றைய தினம் நாட்டின் கவனம் முழுவதும் சேவைக்கூட்டுறவின் மீது திரும்பியிருக்கிறது. விவசாயம் பெருக, விவசாயிகள் நல்லபடியாக வாழ சேவைக் கூட்டுறவுகள் மிகவும் முக்கியமென்பதில் சந்தேகம் இல்லை.

★

## வினா

இன்றைய விலைவாசிகளைப் பார்த்தால் பயமாக இருக்கிறதே! மக்கள் தங்களுக்கு வேண்டிய அடிப்படைத் தேவைகளை நியாயமான விலைகளில் எப்போது வாங்கமுடியும்? காங்கிரஸ் அரசினர் இது பற்றி என்ன உறுதி தருகிறார்கள்?

## விடை

சாதாரணமாக தினசரி வாழ்க்கையில் தேவையாக உள்ள பொருள்களின் விலைகள் அதிகரித்துள்ளன என்பது உண்மை. இதை மறைக்கத் தேவையில்லை. இதற்கு என்ன காரணம் என்று சற்று பார்ப்போம்.

கடந்த சில வருடங்களாக நாம் திட்டமிட்டு முன்னேறுவதற்காக முயற்சி செய்து வருகிறோம். அப்படிச் செய்கின்ற போது, உற்பத்தியைப் பெருக்க நிறைய முதலீடு செய்ய வேண்டியிருக்கிறது. அதே நேரத்தில் கோடிக்கணக்கான மக்களுக்குப் புதிதான வேலை வாய்ப்புக் கிடைத்திருப்பதனால் பணப் புழக்கமும் பொருள்களை வாங்கக் கூடிய சக்தியும் அதிகமாகி இருக்கின்றன.

இன்னொன்றையும் நாம் கவனிக்க வேண்டும். நிறைய முதலீடு செய்தாலும் உற்பத்தி உடனடியாக ஏற்படுவதில்லை. அதாவது பொருள்கள் உற்பத்தியாவதற்குள் மக்களுடைய வாங்கும் சக்தி அதிகமாகிவிடுகிறது. இந்தக் காரணத்தால் விலைவாசி

கள் ஓரளவு அதிகமாவதைத் தடுக்கமுடிவதில்லை.

விலைவாசிகள் நம் நாட்டில் மட்டும் ஏறவில்லை. சென்ற 10 வருடங்களில் உலகத்தின் பல நாடுகளில் பொருள்களின் விலை அதிகரிப்பு கீழ்க் கண்ட விகிதத்தில் அமைந்திருக்கிறது.

| | |
|---|---|
| இந்தியா | 1 சதவீதம் |
| அமெரிக்கா | 16 ,, |
| மேற்கு ஜெர்மனி | 25 ,, |
| பிரிட்டன் | 33 ,, |
| ஜப்பான் | 43 ,, |

அதாவது பல நாடுகளில் ஏற்பட்டுள்ள விலை ஏற்றத்தைவிட நம் நாட்டில் குறைவுதான். இதை ஒரு ஆறுதலுக்காகக் கூறவில்லை. வளரும் பொருளாதாரத்தில் விலை வாசிகள் ஏறிக்கொண்டு போவதைத் தடுக்க முடியாது என்பதைப் புரிந்துகொள்ளத்தான் மேலே கண்டபடி ஒப்பிட்டுப் பார்த்தோம்.

விலைவாசிகள் ஏற்றத்தைக் குறைக்க உணவு தானியங்கள் உற்பத்தியில் 32 சதவீதமும் துணி உற்பத்தியில், 42 சதவீதமும் அதிகமாக்க வேண்டுமென்று மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்தில் உறுதிகொண்டிருக்கிறோம். சென்ற 10 வருடங்களில் நமது திட்டங்களின் மூலமாக மட்டும் சுமார் 10,000 கோடி ரூபாய் செலவிடப்பட்டுள்ளது. இந்தச் செலவில் கணிசமான அளவு கூலியாகவும், சம்பளமாகவும், விநியோகப்பட்டிருக்கின்றன. அதோடு கூட நாட்டின் ஜனத்தொகை மளமளவென அதிகரித்துக் கொண்டே போகிறது. இதனால் மக்களின் தேவைகளும் வேகமாக அதிகரிக்கின்றன.

அதிகச் சம்பளம் பெறுவதால் வாங்கும் சக்தியும் ஜனத்தொகை பெருகுவதால் தேவைகளும் ஆக இரண்டு முனைகளிலும் பொருள்களுக்குக் கிராக்கி ஏற்படக் கூடிய சூழ்நிலை உருவாகி விலைவாசிகள் ஏறிவிடுகின்றன. இதுதான் பிரத்தியட்ச நிலை.

கம்யூனிஸ்டு நாடுகளில் இப்படித்தான் செலவு செய்ய வேண்டும் என்று உத்தரவு போடுவார்கள். சம்பள விஷயங்களில் எதிர்த்துப் பேச முடியாத காரணத்தினால், கட்டுப்பாடுகளை அமுல் நடத்துவார்கள். இப்படி யெல்லாம் செய்து விலை ஏற்றத்தைக் குறைப்பார்கள்.

ஆனால் நம் நாட்டில் அத்தகைய நிர்ப்பந்தங்கள் எதுவும் இல்லை. மக்களுடைய தேவையை அரசினர் கட்டுப்படுத்துவதில்லை. கூலியும் சம்பளமும் அதிகமாகக் கொடுக்கப்படுகின்றன; காங்கிரஸ் அரசினர் சோஷலிசக் கொள்கை காரணமாக, ஏழை, எளியவர்களுக்கும், முன்பு அரிதாகத் தோன்றிய சாதனங்கள், பரவலாகக் கிடைக்கும்படி செய்யப்பட்டுள்ளன.

நிறைய உற்பத்தி செய்தல் பணம் சம்பந்தமான பாதுகாப்புகள் ஏற்படுத்துதல், மக்களது சேமிப்புகளை உற்பத்தித் துறைகளில் போடும்படி செய்தல் போன்ற காரியங்களால் விலை ஏற்றத்தைச் சமாளிக்க முயற்சி செய்யப்படுகின்றன.

விலைஏற்றம் தற்காலிகமானது. உறுதியான அரசாங்கம் திட்டமிட்டு வேலை செய்வதன் மூலம் அது சில வருடங்களுக்குள் குறைந்து விடும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. *

## வானொலி நிலைய ஆலோசனைக் குழு

நாட்டின் ஒவ்வொரு பகுதியிலுள்ள மக்களும் மற்றெல்லாப் பகுதிகள்பற்றியும் நன்கு உணர்ந்துகொள்வதற்கு உதவும் வானொலி நிகழ்ச்சிகளின் முக்கியத்துவம் பற்றி நடந்த ஆலோசனைக் கமிட்டிக் கூட்டத்திற்கு திருச்சி வானொலி நிலைய டைரக்டர் திரு. எஸ்.வி. நடராஜன் தலைமை வகித்தார்.

தேசிய ஒருமைப்பாடு பற்றிய நிகழ்ச்சிகளின் முக்கியத்துவத்தை விளக்குகையில், இந்த நாட்டின் ஒவ்வொரு பகுதியிலுமுள்ள மக்களின் பெரும்பாலோர் மற்றப் பகுதிகளுக்குப் போயிராதபடியால் அவற்றைப்பற்றி அவர்களுக்கு தெரிந்திருக்காது. பல்வேறு இடங்களுக்கும் சென்றவர்களுக்கு மொத்தத்தில் நாடு முழுவதுக்கும் பொதுவான ஒரே மாதிரியான விஷயங்கள் பல தெரிந்திருக்கும். கருத்து, நம்பிக்கை, பழமொழி முதலியன கூட பெரும்பாலும் நாடெங்கும் ஒரேமாதிரி இருக்கிறது. மக்களிடையே ஒருமைப்பாட்டு உணர்ச்சியும் ஐக்கிய உணர்ச்சியும் உண்டாவதற்கு இம்மாதிரி ஒற்றுமை அம்சங்களை உணர்த்த வேண்டியது ஒலிபரப்பு ஸ்தானத்தின் கடமையாகும்.

சம்பவங்கள், ஸ்தல விளக்கங்கள் முதலியவற்றை நாடக ரூபத்தில் நேயர்களுக்கு எடுத்துரைப்பது பேச்சுகள், விவாதங்களைக் காட்டிலும் நல்ல பலனளிக்கக் கூடும் என்பதையும் நிகழ்ச்சிகள் பின்னும் சிறந்த முறையில் தயாரிக்கப்படவேண்டும் என்ற நோக்கத்துடன், தங்கள் கருத்துக்களையும் யோசனைகளையும் வானொலி நிலையத்திற்கு எழுதத் தயங்கக்கூடாது என்றும் தலைவர் அங்கத்தினர்களிடம் தெரிவித்தார்.

திருச்சியில், சில வாரங்களாக புதிய பாணியில் தயாரிக்கப்பட்ட தாளவாத்தியக் கச்சேரி யொன்றைக் கமிட்டி அங்கத்தினர்கள் கேட்டார்கள். *

---

**வலங்கிமான் டி.மு. கோ**
O. P. 33/61

ஹல்லிமா பீவி 1, ஆயிசா பீவி 2, K. M. அப்துல் ஜபார் 3. —மனுதார்கள்
Nil —எதிர்மனுதார்

பாபநாசம் தாலுகா ராஜகிரி வடக்குத் தெருவில் 4-8-50 ல் இறந்த குலாம்சா மகன் மொகைதீன் பாட்சா பெயரால் கும்பகோணம் இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்டிலுள்ள ரூ. 499 ஐ வசூலித்தடைய ஷை மனுதார்கள் வார்சு சர்டிபிகேட் கோரி கொடுத்த மனு 11—1—62 ல் விசாரணை. ஆக்ஷேபனையை தெரிவிக்கலாம்.

M. தாஜுதீன் B. A., B. L.,
மனுதார்கள் அட்வகேட்
1 | 4721 | 181

(2-ம் பக்க தொடர்ச்சி)

ஒரு பிரபல அமெரிக்கக் கம்பெனியானது, சூரிய வெப்பத்தைப் பெற பரவலாயமான பிரதிபலிக்கும் சாதனத்தைச் சமீபத்தில் கண்டுபிடித்திருக்கிறது. உஷ்ண மேறிய உடன் மின் ஓட்டம் ஏற்படுகின்றது; இவ்விசை ஒரு தண்ணீர்க் குழாயை இயக்கக் கூடியது. 20 அடி ஆழத்திலிருந்து 40 ஏக்கர் நிலத்திற்கு தண்ணீர் இறைக்கலாம்.

## சூரிய மின்கல அடுக்கு

சூரியனிலிருந்து விசையைப் பெற அமெரிக்கா நடத்தி வரும் ஆராய்ச்சியில் குறிப்பிடத் தக்கது, சூரிய மின்கல அடுக்கு(பாட்டரி) ஆகும். 1954-ம் வருடத்தில் இது கண்டுபிடிக்கப்பட்டது. இது ஒரு பெரிய தொட்டி போன்று இருக்கும். சுத்திகரிக்கப்பட்ட சிலிக்கன் உள்ள கண்ணறையுள்ள சாதனம் நீரால் நிரப்பப்பட்டிருக்கும்; இதில் ஆர்ஸனிக்கையும், போராஸையும் சிறிது சேர்த்திருப்பார்கள். ஒவ்வொரு வட்டுப் போன்ற கலமும் ஒரு சிறிய மின்சார உற்பத்தி ஜனனியாகும். சூரிய வெளிச்சம் கண்ணறைகள் மீது பட்டதும் மின் ஓட்டம் ஏற்படுகின்றது. பசை மின் கலங்களின் மூலம் இரவில் அல்லது மப்பும் மந்தாரமுமுள்ள காலங்களில் மின்விசையைப் பெற முடிகின்றது. ஒரு கம்பத்தில் அமைக்கப்பட்ட இவ்வகையான பாட்டரி 6 மாத காலத்திற்கு ஒரு கிராம டெலிபோனை (ஜார்ஜியாவில்) இயக்க உபயோகிக்கப்பட்டது.

இவை போன்ற பாட்டரிகளை சூரிய-விசை ரேடியோக்களிலும், காதுக் கருவிகளிலும் உபயோகித்தனர்.

சுத்தம் செய்யப்பட்ட சிலிக்கன் தங்கத்திற்குச் சமமான விலை மதிப்புள்ளது. வர்த்தக ரீதியில் உபயோகிக்க சூரிய பாட்டரிகள் மிகவும் விலையுள்ளவை. இருந்தாலும், குறைந்த பளுவுள்ள சாதனங்களை அமைக்க வேண்டிய விண்வெளிக் கப்பல்களில் விசையுற்பத்திக்கு இந்த பாட்டரிகள் பயன்படுகின்றன. எக்ஸ்புளோரர்-6 செயற்கைக் கோளத்தில் சூரிய சக்தியைப் பயன்படுத்தியே ரேடியோவையும், விஞ்ஞானத் தகவல்களைப் பூமிக்கு அனுப்பும் கருவிகளையும் இயங்கச் செய்தார்கள்.

## சூரிய உலைகள்

விஞ்ஞான ஆராய்ச்சிகளை நடத்த பரீட்சார்த்த சூரிய உலைகளை அமெரிக்கா அமைத்து வருகிறது. கலிபோர்னியாவில் சான்டிகோ என்னுமிடத்தில், மிகப் பெரிய உலையொன்று உள்ளது. வளைவான அலுமினிய ஆடி ஒன்று சூரிய கிரணங்களைக் குவி மையத்திற்குச் செலுத்துகின்றது.

நடுப்பகலில் இந்த உலையானது 4000 டிகிரி செண்டிகிரேட் உஷ்ணத்தை எட்டுகிறது. சில நொடிகளில் ஒரு உருக்கு ஆணியை இந்த உஷ்ணம் உருக்கச் செய்யக்கூடும். சூரிய உலையிலிருந்து அதிக உஷ்ணத்தைப் பெறலாம். தொழிற்சாலைகளிலுள்ள மற்ற உலைகளைப் போன்று, எரிபொருள்களினால் அசுத்தத் தன்மை ஏற்படுவதில்லை; ஆகவே ஆராய்ச்சி நடத்தும் கருவிகளுக்கு மிகவும் பயன்படக் கூடியது.

சூரிய அடுப்பு, சூரிய ஜனனி சூரிய பாட்டரி, சூரிய உலை ஆகியவற்றின் மூலம் அதிக வசதிகளை அடைய முடியும் என்றாலும் உப்பு நீரைக் குடி தண்ணீராக மாற்றும் சூரிய-வாலை மிகப் பயன்படக் கூடியது என்று கூறலாம்.

சூரியனிலிருந்து நாம் இவ்வாறு எல்லையில்லாத செல்வத்தைப் பெறுகிறோம். ஆனால் இதில் 60 சதவீதத்தைக்கூட நாம் பயன்படுத்த முடியவில்லை. பெரும்பாலான சக்தி பூமியைச் சுற்றிலுமுள்ள மேகங்களினால் கிரகிக்கப்படுகின்றன. இவ்வாறு வீணாகும் சக்தியையும் தவிர்க்கும் வழிகளைக் கண்டுபிடித்து அதைத் தேக்கி வைக்கலாம் என்று அமெரிக்க விஞ்ஞானிகள் நம்புகிறார்கள். அப்பொழுது அணு சக்தியையும் விட, சூரியனிலிருந்து நாம் பெறும் சக்தி வருங்கால உலகில் மிகவும் முக்கியத்துவம் பெறும்.



---

### சீர்காழி டி. மு. கோ
S. C. 902/61

கஸ்பா சீர்காழி டிமுகா பேட்டையிலுள்ள கோவிந்த முதலியார் மகன் N. K. நடராஜ முதலியார் — வாதி

கஸ்பா சீர்காழி சட்டநாதர் காலனியிலுள்ள P. செல்லப்ப செட்டியார் — பிரதிவாதி

ஷை நெம்பரில் வாதிக்கு பிரதிவாதியால் சேரவேண்டிய தொகை ரூ. 365-71 க்கு செய்த தாவா 11-1-62ல் கெடு. அன்று ஷை கோர்ட்டில் ஆஜராகத் தவறினால் எக்ஸ்பார்டியாக முடிவு செய்யப்படும்.

J. ராமகிருஷ்ணன்
அட்வகேட்

2 | 4722 | 182

---

### அரியலூர் டி. மு. கோ
S. C. 1821/61

அலமேலு ஆச்சி — வாதி
வடிவேல் மூப்பனர் — பிரதிவாதி

ஷை நெம்பரில் வாதி 25-8-59 தேதிய புரோநோட்டுபடி சேரவேண்டிய அசல் வட்டி கூடுதல் ரூ. 250-77 nP க்கு பிரதிவாதி பேரில் தாவா செய்து 3-1-62ல் ஈரக்கி. அன்று கோர்ட்டில் ஆஜராகி ஆக்ஷேபனையை தெரிவிக்காவிடில் Exparte ஆக தீர்ப்பு செய்யப்படும்.

T. V. வெங்கட்ராமன்
வாதி அட்வகேட்

3 | 4742 | 183

# வாக்குரிமை

மக்கள் சபைத் தேர்தல்களும் சட்டசபைத் தேர்தல்களும் வயதுவந்தோருக்கு வாக்குரிமை என்ற அடிப்படையில் நடைபெறவேண்டும்; அதாவது 21 வயதுக்குக் குறையாத இந்திய பிரஜை ஒவ்வொருவரும் அவர்கள், அந்தப் பிரதேசத்தில் வசிக்காதது காரணமாகவோ, சித்தசுவாதீனமின்மை, குற்றம் புரிந்தது அல்லது சட்ட விரோதமான செயல்களில் ஈடுபட்டது ஆகியவை காரணமாகவோ சட்டப்படி வாக்குரிமையை இழந்தவர்களாக இருந்தாலொழிய, - தங்களை ஒரு வாக்காளராகப் பதிவு செய்துகொள்ள உரிமை பெற்றுள்ளனர்.

புராதன இந்தியாவில் பல இடங்களிலும் ஜனநாயகக் குடியரசுகள் இருந்து வந்தன என்பது பலருக்குத் தெரியாமலிருக்கலாம்; ஆனால் குடியரசுகள் தழைத்தோங்கி வந்தன என்பதற்குப் புத்த இலக்கியங்களில் ஏராளமான ஆதாரங்கள் காணப்படுகின்றன; கிரேக்கர்கள் விட்டுச்சென்ற குறிப்புகளிலும் ஜனநாயக நிர்வாகத்தைப் பற்றிய விஷயங்கள் நிறைய இருக்கின்றன. அக்குடியரசுகளில் வயது வந்த ஆண்கள் எல்லோருக்கும் வாக்குரிமையும், பொது விஷயங்களை விவாதிக்கும் போது கலந்துகொள்ளும் உரிமையும் இருந்தன.

ஆனால் மக்கள் எண்ணிக்கை அதிகரித்து சமூக அமைப்பும் சிக்கலானதால், எல்லா பிரஜைகளும் ஒரே இடத்தில் கூடுவது கஷ்டமாகிவிட்டது. ஆகவே பெரிய சபைக்குப் பதிலாக ஓரளவு சிறிய பிரதிநிதித்துவ சபை தோன்றிற்று. ஹிந்து அரசியல் வரலாற்றில், தேர்தல், வாக்கெடுப்பு வாக்குப் பதிவு, வாக்குச் சீட்டு முதலியவை பற்றிய குறிப்புகள் மலிந்திருக்கின்றன.

சில குடியரசுகளில்,குறிப்பாக-பிரபுக்கள் குடியரசுகளில்-குடும்பத்துக்கு ஒரு வாக்குரிமை வீதம் இருந்திருக்கக்கூடும். பிற குடியரசுகளில், வயதுவந்த எல்லா ஆண்களுக்கும், வேறு காரணங்களால் இழக்காதிருந்தால், வாக்குரிமை இருந்தது; வெளிநாட்டினரும் கூட இந்த உரிமையைப் பெறலாம். வாக்குரிமையைப் பயன்படுத்துவதன் மூலம் தனிப்பட்டவரின் விருப்பம் சுதந்திரமாகத் தெரிவிக்கப்படுகிறது.

பெரிய சாம்ராஜ்யங்கள் குடியரசு நாடுகளை விழுங்கிவிட்ட பிறகுங்கூட கிராமப் பிரச்னைகளை பஞ்சாயத்துக்களின் மூலமாக ஒழுங்குபடுத்தும் முறை வெகு காலமாக இருந்துவந்தது. முஸ்லீம் மன்னர்களின் ஆட்சியின் போதும் மக்கள் ஸ்தாபனங்களின் மூலமாக பொது விஷயங்கள் தீர்மானிக்கப்பட்டு வந்தன.

## பிரிட்டிஷ் அரசியல் மாறுதல்

பிரிட்டிஷ் ஆட்சியின்போது, ரெவின்யூ, நீதி பரிபாலனம், சட்ட விவகாரங்கள் ஆகிய துறைகள் கிராமங்களிடமிருந்து எடுக்கப்பட்டு மத்திய சர்க்காருக்கு மாற்றப்பட்டன. இந்த நடவடிக்கையினால் மக்கள் ஸ்தாபனம் வலுவிழந்தது.

ஆகவே வயதுவந்தோர் வாக்குரிமை அடிப்படையில் ஜனநாயக சர்க்கார் ஏற்பட்டிருப்பது, புதியதல்ல, அன்னிய ஆட்சியின் காரணமாகத் துண்டிக்கப்பட்ட வரலாறு மீண்டும் இணைக்கப்பட்டிருக்கிறது. புராதன இந்தியாவில் தாராள வாக்குரிமை இருந்தது; நவ இந்தியாவில் அது மீண்டும் உயிர் பெற்றிருக்கிறது.

## 1952 தேர்தலுக்கு முன்

1952-ல் நடைபெற்ற தேர்தல்களுக்கு முன், 'ஏ' பகுதி ராஜ்யங்களான பழைய மாகாணங்களில், 1935 இந்தியா சட்டத்தின் கீழ், மத்திய, ராஜ்ய சட்ட சபைகளுக்காக ஓரளவு கட்டுப்படுத்தப்பட்ட வாக்குரிமை இருந்து வந்தது. வாக்குரிமை பெறுவதற்குரிய யோக்கியதாம்சம் ஒவ்வொரு மகாணத்திலும் வேறுபட்டிருந்தது. எனினும் அந்த உரிமை, வரி விதிப்பு, சொத்து, கல்வி அறிவு, சமுதாயம் முதலியவற்றையொட்டி இருந்தது.

இம்மாதிரிக் கட்டுப்பாடுகள் பிற்போக்கானவை என்று கருதப்பட்டது. இந்தியாவின் அரசியல் சட்டத்தின் கொள்கைகளைத் தீர்மானிப்பதற்காக சர்வ கட்சி மகாநாடு 1920-ல் நியமித்த, நேரு கமிட்டி, வயது வந்தோருக்கு வாக்குரிமை இருக்கவேண்டுமென்பதாக யோசனை தெரிவித்தது.

## முதலாவது வட்ட மேஜை மகாநாடு

முதலாவது வட்ட மேஜை மகாநாட்டின் வாக்குரிமை உப கமிட்டி, வயது வந்தோருக்கு வாக்குரிமை என்பது நாட்டின் இறுதி லட்சியமாக இருக்கவேண்டுமென்பதாகக் கருதியது. 1932-ல் அறிக்கை சமர்ப்பித்த அக்கமிட்டி வயது வந்தோருக்கு வாக்குரிமை அளிப்பது நியாயமென்பதை ஒப்புக்கொண்டு, அது விரும்பத்தக்கதல்ல என்று தெரிவித்தது.

அரசியல் சட்ட நிர்ணய சபையின் ஜீவாதார உரிமைகள் உப கமிட்டியும், சிறுபான்மையினர் உப கமிட்டியும், அரசியல் சட்டத்தில் வயது வந்தோர் வாக்குரிமை ஜீவாதார உரிமையாகச் சேர்க்கப்படவேண்டுமென்பதாகச் சிபாரிசு செய்தன.

ஆனால், சிறுபான்மையினர் ஜீவாதார உரிமைகள் ஆலோசனைக் கமிட்டி, அந்த உரிமைகளை ஜீவாதார உரிமைகளில் சேர்ப்பதற்குப் பதிலாக அரசியல் சட்டத்தில் வேறு இடங்களில் சேர்க்கலாமென்பதாக யோசனை கூறியது. அதன்படி, அரசியல் சட்டத்தின் 326-வது ஷரத்தில், ஒவ்வொரு ராஜ்யத்திலும் சட்ட சபை, மக்கள் சபைத் தேர்தல்கள், வயது வந்தோர் வாக்குரிமை அடிப்படையில் நடைபெறவேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது.

## வயதுவந்தோருக்கு வாக்குரிமையா ?

வயது வந்தோருக்கு வாக்குரிமை அளிப்பதற்கு எதிராகக் கூறப்படும் முக்கியமான வாதம் அது மிகவும் சிக்கலான வேலையென்பதாகும். கல்வி அறிவில்லாதவர்கள் தங்கள் உரிமையைத் திறமையாகவும் ரகசியமாகவும் பயன்படுத்த முடியாதாகையால் தேர்தலில் உண்மையான பலன் ஏற்படாது என்றும் கூறப்பட்டது. இவையெல்லாம் நியாயமானவைதான்; ஆனால், ஜனநாயகத்தின் உண்மைத் தன்மையைப் பிரதிபலிக்கக்கூடிய விதத்தில், வயது வந்தோருக்கு வாக்குரிமை என்னும் கொள்கையை அரசியல் நிர்ணய சபை ஏற்றுக்கொண்டது. சாமான்ய மக்களின் திறமையிலும் அறிவிலும் நம்பிக்கை வைத்து மேற்கொள்ளப்பட்ட முடிவுதான் இது. இதுவரை நடைபெற்ற இரண்டு தேர்தல்களும் அந்த நம்பிக்கையை வலுப்படுத்தியிருக்கின்றன.

**நாமக்கல் டி. மு. கோ**

S. C. No. 718 of 1961

நாமக்கல் தாலூக்கா பாச்சல் கிராமத்திலுள்ள, கிருஷ்ண முதலியார் குமாரர் V. K. தாசப்ப முதலியார் —வாதி

ஷை தாலூக்கா கந்தம்பாளையத்திலுள்ள முனியப்ப முதலியார் குமாரர் வி. மு. முருகேச முதலியார் —பிரதிவாதி

வாதியின் பத்து வரவு கணக்குப்படி 19—7—61ல் பேரேடு கணக்குப்படி அசல் வட்டி உட்பட ரூ. 427-10 nPம் பின் வட்டி சிலவும் வாதிக்கு பிரதிவாதியால் கிடைக்க செய்த தாவா 16-1-1962 ல் வாய்தா. அன்று ஷை கோர்ட்டில் ஆஜராகாவிடில் Exparte தீர்ப்பு ஏற்படும்.

K. ராகவேந்திரராவ்

4 | 4743 | 184வாதி அட்வகேட்



Edited & Published by its owner Sri Triloka Sitaram and Printed by him at his Shivaji Newsprinters, 24, A-Theradi Bazaar, Tiruchy-2.
Single copy six nP ANNUAL SUBSCRIPTION INCLUDING 4 SPECIAL NUMBERS : For INDIVIDUAL Rs. 5. For INSTITUTIONS Rs. 10